# தனவைசிய ஊழியன்

மலர் 3, இதழ் 36

May 25, 1923

Record no. 148

# *Taṉavaiciya ūḻiyaṉ*

## *Malar 3, itaḻ 36*

## *May 25, 1923*

Record no. 148

உ
சிவமயம்.

சென்னை பதிவு எண் கரு0க — தந்திவிலாசம்:—"Oolian".

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்றும்
வெள்ளி தோறும் வெளிவருவது.

ஆசிரியர்:— ராய. சொக்கலிங்கம்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.—திருக்குறள்.

இழைப்புர் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்.—திருக்குறள்.

மலர் ௩. காரைக்குடி ருத்ரோத்காரி ஹு வைகாசி மீ ௨௨ (௨௫—௫—௧௯௨௩) இதழ் ௩௰.

## வாழ்வுதா னெவ்வளவு.

பூவுலகில் தாவர்முதல் மக்கள் ஈறாகப் பல வேறு ஜீவராசிகள் வாழ்கின்றன. யாவற்றுள்ளும் சிறந்த பிறவி மக்கட்பிறவி. எல்லா ஜீவராசிகளையும் தகுதிக் கேற்பப்பகுத்தறிந்துகொண்டு செலுத்தும் ஆற்றலும் அறிவும் சிறப்பாக மக்கள் யாக்கை பெற்றோர்க்கே உரியன. ஆகலின் மக்கட்பிறவி சிறப்புடைத்தெனக் கூறுகின்றார் அறிஞர். இத்துணைச் சிறப்புடை மக்கட் பிறவிதான் எத்துணைகாலம் நிலைக்கும்; என்பதை நோக்கின் ஆச்சர்யமாகவே தோன்றும். எவ்வளவோ விஷயங்களை வரையறுத்துரைத்த மேலோர்கள் இவ்வாழ்வுக்கு ஒரு வரையறை கூறினார்களுமில்லை. அநுபவத்தில் கூறவும் முடியவில்லை. எவரும் எக்காலத்துங் கூறவும் முடியாது. அத்துணைப் பெரியகாரியமாக விருக்கின்றது இது. ஒரு ஆன்மாவுக்கு, ஒருவிநாடி வாழ்விருக்கிறது; ஒரு நாழிகை வாழ்விருக்கிறது; ஒரு நாள் வாழ்விருக்கிறது; ஒரு மாசவாழ்விருக்கிறது; ஒரு வருஷ வாழ்விருக்கிறது; பத்து ஆண்டு வாழ்விருக்கிறது; அபூர்வமாக நூறு வருட வாழ்வுமிருக்கிறது. பொதுவாக வாழ்விற்கு ஒரு அளவுயில்லா விட்டாலும் இன்ன யாக்கையிற் புகுந்த ஆன்மா அவ்யாக்கையோடு கூடி இத்துணைகாலந்தான் வாழுமென்றும் நிச்சயமாகவரையறுக்கவும் கூடவில்லை. இதனை நிச்சயித்தற்குப் பண்டை நாள் தொட்டு நம்நாட்டில் ஜோதிடசாஸ்திரம் என்ற ஒரு துறை யிருந்தபோதிலும் அதனை வெட்டொன்று துண்டு இரண்டாக நிச்சயித்துக்கூறும் அத்துறை வல்லுநரும் இந்நாள் காணப்படவில்லை; முன்னாளில் இருந்தார்களோ என்னவோ அதனையுங் கூறமுடியவில்லை. இத்துறையாளரும் "அப்படிநடந்தாலும் நடக்கும் இப்படிநடந்தாலும் நடக்கும்" என்று ஏதேதோ எழுதிவிடுகின்றனர். பெரும்பாலும் பிறழவே நடக்கின்றன. கேட்டால், "அது அங்கு இருந்தால் நான்சொன்னது சரிதான்; அதற்கு இது விரோதம்; அதனால் மாறிவிட்டது." என்று கூறிவிடுகின்றனர். எல்லாம்வயிற்றுப்பிழைப்புக்கு.

"தொலைவிலாச் சத்தமுஞ் சோதிடமும் என்றாங்கிவை பிதற்றும் பித்தரிற் பேதையாரில்" என நாலடி கூறியதே அநுபவத்திற்கு ஒத்ததாகவிருக்கிறது.

எனவே எவர் வாழ்வு எவ்வளவு என உறுதியாகக்கூற எவராலும் முடியவில்லை. பொதுவாக வாழ்விற்கு ஒரு எல்லையில்லை. சிறப்பாகத் தனித்தனியாக யாரும் கூறினும் அது தவறி விடுகிறது. நம்நாட்டிற் பிறந்த மக்களில் அநேகமாக இயல்புள்ளவர்களெல்லாம் ஜாதகம் எழுதித்தான் வைத்திருக்கின்றனர். ஆனால் அதன்படி நடக்கத்தானில்லை. ஆகலின் நமக்கு வாழ்வு அதிகமிருக்கிறது என்று நினைத்து ஒன்றைப் பின்னே செய்யலாமென ஒதுக்கிவைப்பதற்கில்லை. திடீரென ஒருவர்க்கு வாழ்வு முடிந்து விடுகிறது. அவர், அவ்வளவு சீக்கிரம் அவர் ஆயுள் முடிந்துவிடுமென்று எண்ணியு மிருக்கமாட்டார்.

இதற்குப் பழம் பெரும் சாஸ்திரங்கள் வேண்டுவதில்லை. ஒவ்வொரு நாளும் பார்க்கின்றோம். இருந்தநிலையில் இறந்துவிடுகிறார் ஒருவர்; கிடந்தபடியே சென்றுவிடுகிறார் ஒருவர்; வாலிபத்தில் மடிகிறார் ஒருவர்; வயோதிகத்தில் மாள்கிறார் ஒருவர். பகலிற் சாகிறார் ஒருவர்; இரவில் ஏகிறார் ஒருவர். நேற்றிருந்தவரை இன்று காண்கின்றோமில்லை. இப்பொழுது நன்றாக விருப்பவர் உயிர் சற்று நேரத்தில் ஒரு விநாடிப்போதில் பிரிந்துவிடுகிறது. முடிவாக இன்றோ பின்னோ இறப்பது திண்ணம். சாச்வதமாக நீடூழிகாலம் வாழக் கூடியவர் எவருமில்லை. இது யாவரும் அறிந்தது.

இதனை நன்றாக அறியும் மனிதர்கள், இவ்வற்பவாழ்வைச் சிறிதும் மனத்துட்கொள்ளாது, ஆஹா! என்னென்னவெல்லாம் செய்து விடுகின்றனர். மனிதர்கள் செய்யுந் தீங்குக்கு ஒரு எல்லைதானுண்டா?

எத்தனை பேர், பொறாமை கொண்டு புழுங்குகின்றனர்! துவேஷம் மிகுந்து தொலைகின்றனர்! காமங்கொண்டு கழிகின்றனர்! பிறர்மனை நயந்து பேதுறுகின்றனர்! பேதை மதியாற் பீடழிகின்றனர்! வாய்மை மறந்து மடிகின்றனர்! கொள்ளைகொண்டு குலைகின்றனர்! மதுமிக வுண்டு மயங்குகின்றனர்! கொலைத்தொழில் பூண்டு கோதுறுகின்றனர்! அடக்கியாள அலைகின்றனர்! வேற்று நாடாள விரும்புகின்றனர்! தாய்மொழி மறந்து தவிக்கின்றனர்! மரபை மறந்து மதியழிகின்றனர்! சமயம் மறந்து சாகின்றனர்! அச்சங்கொண்டு அலியாகின்றனர்!

"நின்றான் இருந்தான் கிடந்தான் தன்கேளலறச் சென்றான்" என்பதை நித்தமும் கேட்கும் மனிதர்காள்! இவ்வாழ்நாள், அற்பம்; புன்னுனிமேல் நீர் போன்றது; நிலையாமை யுடையது; ஆகலின் இன்னினியே செய்க அறவினை. எத்தனைகாலமிருப்பினும் முடிவில் இறப்பது சாதம். இருப்பது பொய் போவது மெய் யென்றெண்ணுங்கள். ஒருத்தருக்குந் தீங்கினை யுன்னாதேயுங்கள். "நெருநலுளனொருவன் இன்றில்லை யென்னும் பெருமையுடைத்திவ்வுலகு."

வாழ்வு அற்பமென்பதைக் கண்கூடாகக் காண்கின்றீர்கள். கண்டும் ஏன் ஒருவர்க்குத் தீங்குசெய்ய உன்னுகின்றீர்கள். தீங்கு செய்து, கிடைத்தற்கரிய மானிடப் பிறவி பெற்றதன்பயனை யிழந்து பரிதபித்து அருநரகிற்கு ஆளாதல்வேண்டும். அருந்தவங்கிடந்து பெறவேண்டிய மானிடப் பிறவியைப் பெற்றும், அரும்பெறல் யாக்கையைப் பெற்றல் பயத்தால் பெரும் பயனுமாற்றவே கொள்ளாது, காகம்புக ஏதுவான கருமஞ்செய்து கடைப்பிறப்பெய்தல் நன்றோ? வேண்டாம்! வேண்டாம்!! வாழ்நாளின் குறைவையும் மனிதப்பிறவியின் நிறைவையும் உன்னி நல்லனபுரிந்து நற்பேற்றை யடையுங்கள்!



## பெண்களுலகம்.

### பெருமையுடையசெயல் எது?

நமது பெண்கட்குப் "பெருமையுடைய செயல் எது" எதைச் செய்பவர் பெருமை யுடையவர் என்பதை விளக்கிக் காட்ட வேண்டுவது மிகவும் அவசியமாகிறது. நம்மில் ஆடவர்களிலும் பலர் இதனைப் பிறழ உணர்ந்து தவிக்கின்றனர். எனினும் பெரும்பான்மை நோக்கி இதனைப் பெண்களுலகிற் களிக்கின்றோம்.

உண்மையிற் பெருமை யுடையசெயல் எதுவோ பெருமை யுடையா ரெவரோ அதுவும் அவரும், நமது பெண்டட்கும் அவர்கள் போன்ற ஆடவர்க்கும் பெருமை யுடையதாகவும் பெருமையுடையராகவும் தெரியவில்லை. எது பெருமைக்கு விரோதமோ, எவர் பெருமைக்கு விரோதமுடையாரோ, அது பெருமை யுடையதாகவும் அவர் பெருமையுடையாராகவுமே அவர்கட்குத் தோற்றுகிறது.

ஒவ்வொன்றாகச் சில ஆராய்வோம்:— புதுமை கல்யாணம் முதலிய விசேஷங்களிற் கண்ணை மூடிக்கொண்டு அர்த்தமின்றி அள்ளிச் செலவு செய்தல்தான் பெருமையுடைய செயல் என எண்ணுகின்றனர். மற்றவர் செய்ததைக்காட்டினும் ஏதேனும் அதிகமாக விருக்கவேண்டுமாம், அதுதான் பெருமையுடையதாம், விசேஷத்தவறாது, வருபவர்கட்கெல்லாம் (துக்கத்திற்குக்கூட) எதெதற்கோ வென்று சொல்லிப் பணங்கள் கொடுக்கப்படுகிறது. இதுவும் பெருமையுடையதாகவே கருதப்படுகின்றது.

விசேஷங்களில் கூப்பிடப்போகுங் காலங்களிலும் ஒருநாளுக்குள் பலமுறை மோஸ்த்தை ஊடிக்கொண்டு ஒரு முறைக்கு ஒரு மாதிரியாக வேஷந்தரித்து ஒசியலேந்து திருவீதிப்பவனிவருங்காலங்களிலும் நகைகளைச் சுமந்துகொண்டு செல்தல் பெருமையுடைய செயல் என எண்ணப்படுகின்றது சொந்த நகை யில்லாது போயினும் இரவல்நகையாவது வாங்கிப் போட்டாலன்றிப் பெருமையில்லை என நினைக்கப்படுகிறது.

பெற்ற பெண்ணை விலைக்கு விற்றல் பெருமைக்குக் குறைவில்லை. ஆனால், அக்கல்யாணத்திலும் சீர் குறைபவைத்தல் பெருமைக்குக் குறைவு என எண்ணப்படுகின்றது.

கணவன் சொல்வதை ஒருநாள் கூடக் கேட்காவிட்டாலும் பாதகமில்லை; ஏதோ விரதமென்று சொல்லியார்க்கோ கொடுத்து எங்கோ எடுத்து பெண்கள் பலர் ஒன்று சேர்ந்து கூட்டங் கூட்டமாகச் சென்று பெண்ணீர்மை குன்றுதல் பெருமை யுடையதாகப் பேசப்படுகிறது.

பெண்கள் தனியே யாத்திரைசென்று வீட்டிற்கலைப் பெருமையுடையதாகப்பேசுகின்றனர்; அதிலும் அதிக எண்ணிக்கை ஊர் போய்வந்தால் அதற்கொருமதிப்பு. பெரியவீடு கட்டினுல் அதொருபெருமை யுடையசெயல்; அதினும் உள் வீடிருந்தால் இன்னும் அதிகபெருமை. ஒருவர் பணம் வைத்திருந்தால் அவர் பெருமை யுடையவர்; சங்கம் முதலிய சன்மார்க்கங்களில் பிரவேசிக்காதிருப்பவர் மிக ஒழுங்கர்.

இன்னும் மண்டபப்படிக்கு ஆயிரக் கணக்காய்ச் செலவழிப்பது; சுவாமிக்குப் பின் ௪௦-வண்டிக்குமேல் நான்கு வண்டி கூட விடுவது பெருமையுடைய செயல்.

இப்படிப் பெருமையுடைய செயல்பலவாறாக நமதுசமூகம் கருதுகிறது. இது போல நடைமுறையினும் செய்து காட்டி வருகிறது. இன்னும்பல. விரியஞ்சி விடுக்க வேண்டியதாகிறது.

பெண்ணழைத்த வீட்டில் புலாலெடுக்கா திருத்தல்கூடப் பெருமையில்லையெனப் பேசப்படுகிறது. அதைப்பற்றி இவ்வாரம் தனியே வேறெழுதப் பட்டிருக்கிறது.

இவைகளை யெண்ணுந்தோறும் அறிஞர்க்கு இந்த சமூகத்தில் ஏன் பிறந்தோம் என்ற எண்ணங்கவிற வேறு உதிக்காது. என்னகொடுமை! எல்லாம் விபரீதமா? ஒன்றேனும் ஒழுங்காக நடைபெறுதல் வேண்டாவா? தனக்கும் தெரிவதில்லை சொன்னாலும் கேட்பதில்லையென்றால் என்னதாம் செய்யலாம். விஷயங்களைச் சொன்னால் அநேகருக்கு கோபம்வந்து விடுகிறது. செய்யும் தவற்றைத் திருத்திக் கொண்டால் பிறகு யார்தான்சொல்லப் போகிறார்கள். நாட்டம் அதிற் செல்லுதல் வேண்டும்.

விசேஷ காலங்களில் விரும்பத் தகாத செலவு எதற்காகச் செய்வது? பணத்தைக் கையிற் கொடுப்பது எவ்வளவு அநாகரீகம். இது பெருமை யுடையதாகக் கருதப்படுவது எவ்வளவு விந்தை. கற்புடைப் பெண்டிர் கல்யாண காலங்களில் பல வேஷந் தரித்துத் தெருத் தெருவாகத் திரிந்து அலைவது எற்றுக்கு? இரவல் நகை வாங்கிப் போடுவதை எதற்கு ஒப்பிடுவது? பெற்ற பெண்ணை விலைபெற்று விற்கும் கல்யாணத்திற்குச் சீர்வேறு வேண்டும்போலும்! அழகு! அழகு!!

கற்பிலக்கணங்களை அடியோடு விட்டு விட்டு யாத்திரை செல்வதும் விரதம் பிடிப்பதும் எதற்காக? புலாலைத்தின்று புன்புலால் யாக்கை வளர்ப்போரும் விரதம் பிடிக்கின்றனர்! இவர்கட்கு விரதம் என்ன வேண்டியிருக்கிறது!

எல்லாவற்றிற்கும் விடையிறுப்பதென்றால் கட்டுரை நீளும். ஆகலின் அன்பர்கள் ஊகித்துக்கொள்ளலாம்.

இப்பொழுது பெருமை யுடையதாகக் கருதப் படுகின்ற எதுவும் பெருமை யுடைய செயலல்ல. இவைகளை இயற்றுவார் பெருமையுடையா ரல்லர் என்பதை ஒவ்வொருவரும் உணர்தல் வேண்டும்.

நன்மனமுடைமை, கல்வியுடைமை, ஒழுக்கமுடைமை, பரோபகார முடைமை, அன்புடைமை, பொறையுடைமை முதலியனதாம் பெருமையுடைய செயல்; அவையுடையார்தாம் பெருமை யுடையார்; என்பதை அறிந்து அதன்படி யொழுகுங்கள்.

---

## செம்மலையும் வெற்றி வேலும்.

இம்மலையானது கொப்பனாபட்டிக்குக் கிழ்புறம், ஒன்றரை மயில் தூரத்தில் இருக்கிறது. ஆங்கு கலியுகவரதரான ஸ்ரீஷண்முகனுதன் வெற்றிவேல் ரூபமாக வீற்றிருந்து நெடுங்காலமாக, தம்மை தெரிசிக்கும் அன்பர்கட்கு நன்மை யளித்து வந்திருக்கிறார். மேலும் அது விசேடம் பொருந்திய ஸ்தலமாகவுமிருக்கிறது. அம்மலையில் இரண்டு சுரங்க வழிகளுமுண்டு. அவ்வழியாகச் சென்றால், இவ்வளவு தூரந்தான் போகுமென்று வரையறுக்க முடியாது கொஞ்சதூரஞ் சென்றால் வாதபமோக்ஷம் உண்டாகிறது. உட்செல்ல மனம் இடம் கொடுக்கவில்லை. ஆங்குச்சென்று வந்த பெரியார்கள், கூறியது இப்பொழுது கண்கூடாகத் தெரியவருகிறது. பெரியோர்கள் வாசம் செய்யக்கூடிய ஸ்தலமாகவும் அமைப்பெற்றிருப்பது விசேடமே.

இம்மலைக்குக் கொப்பனாப்பட்டி, ஸ்ரீவிவேகானந்த வாசகசாலை அங்கத்தினர்களின் நன் முயற்சியால், கடந்த துந்துபிஆண்டு ஆனித்திங்கள் முதல் மாதா மாதம் வரும் கிருத்திகை நக்ஷத்திரத்தன்று மெய்யன்பர்கள் பலர் வந்து, கந்தக் கடவுளைத் தரிசித்துக்கொண்டு பெருமான் வீற்றிருக்கும் செம்மலை சென்று அன்ன நிவேதனத்தோடு, ஆனந்த பரவசமாய் தெரிசனம் செய்து சிவனடியார்களுக்கு அமுதளித்துக் கந்தன் அருளுக்குப் பாத்திரமாகி வருகிறார்கள். அவ் மெய்யன்பர்கட்கு கந்தர் நீண்ட ஆயுளை யளிப்பாராக!

---



## நியாயவாதி எழுதுகிறார்:—

### வெட்கம்! வெட்கம்!!

புலாலுணவு எவ்வாற்றானும் நாகரீகர்களாற் கொள்ளத்தக்க தொன்றல்ல வென்பதை அறிவாளர்கட்கு யான் விரித்துரைக்க வேண்டுவதில்லை. புலாலுண்போருள்ளும் பல்லோர், "புலாலுண்ணுதல் கூடாதுதான்; ஆனால்" என்று ஏதேதோ கூறுகின்றனரே யன்றித் தம் செய்கையைத் தாபிக்க முற்படவில்லை. இவர்கள் சொல்லுங் காரணங்கள், "உடம்புக்கு ஒத்துக்கொள்ளவில்லை; நீண்டகாலப் பழக்கமாகவின் விட முடியவில்லை; கொஞ்சம் தள்ளிப்பார்த்தேன் நோய் வந்துவிட்டது" என்பனவாதி போலிப் பொருளற்றனதாம். வேண்டுமென்று விதண்டாவாதம் புரிவோர் எங்கேனும் ஒரு சிலரே யிருப்பர். நம் தனவைசிய நாட்டில் இந்நாள் புலாலுணவு தள்ளிப் புனித உணவு கொள்வோர் தொகை பெருகி வருகிற தென்பதிலைய மில்லை.

கல்யாணம் புதுமை முதலிய விசேஷ காலங்களில் அநேகமாக— தலையில் ஒன்றுமில்லாதவர்கள் தவிர, கொஞ்சம் அறிவென்பது உள்ளவர்கள் கூட இவ்வருவருக்கத்தக்க அசுத்த உணவை யகற்றிவிட்டனர். ஆனால், சில விசேஷங்கட்கு இவ்வுணவு மிகவும் இன்றியமையாததெனக் கொள்ளப் படுகிறது. இவற்றுள் பெண்ணழைப்பும் வேவும் பிரதானமானது. இவ் விசேஷங்களில் அழியும் உயிர்கட்கு அளவில்லை. இவ் விசேஷங்களில் விசேஷக்காரர் புலாலுண்ணாவிட்டாலும் வந்தவர்கட்குப் போடுவதென்ற முறை பலமாக அநுட்டிக்கப்பட்டு வருகிறது. இதிற்றப்புவோர் தொகை மிகச் சுருக்கம். விருந்து வைப்போர்க்குக் கொஞ்சமும் பிரியமில்லாவிட்டாலும் விருந்துண்ண வருவோரும் அவரைச் சார்ந்தோரும் கட்டாயப்படுத்தி உயிர் வாங்குகின்றனர். பெண்ணழைத்த வீட்டில் புலாலெடுக்காவிட்டால் பெருமை யில்லையென்கின்றனர். வேவு எடுக்கும் வீட்டில் வெட்டி வீழ்த்தாவிட்டால் மேன்மை யில்லையென்கின்றனர். "எங்கள் ஆட்கட்கு அது இல்லாவிட்டால் சரியாக வராது; நாங்கள் ஜனக் கட்டுக்காரர்; எல்லோரும் எங்களைக் கேலிசெய்வார்கள்" என்கின்றனர். வெட்கம்! வெட்கம்!!

இதைக் காட்டினும் வெட்ககரமான விஷயம் வேறு என்னிருக்கிறது. நாங்கள் புலாவில்லாது உண்ண மாட்டோம் என விருந்துக்கு வருவோர் விருந்து வைப்போரிடம் சொல்வது பெரிய மானக்கேடெனக் கிஞ்சிற்றும் மனத்திற்றோன்ற வில்லையே! மக்களறிவு சிறிதேனு மிருப்பின் இது தோன்றாது போகுமா? புலாவில்லாவிட்டால் இவர்கள் சாப்பிட மாட்டார்களாம். ஒரு மூன்றுநாள் கிடந்து தொலைத்துவிட்டுப் பிறகு வீட்டிற்குப் போய் விழுங்கினாலென்ன? மாட்டேனென்பவரை ஏன் கட்டாயப் படுத்துதல் வேண்டும்.

இவர்கட்கு மறுமை யென்பது சிறிதும் ஞாபக மில்லையே. மக்கள் யாக்கை பெற்றோர் அதற்குரிய செயல் செய்யாவிட்டால் இவர்கட்கும்மாக்கட்கும் என்னதாம் வேற்றுமை. வேறுசீவர்களைக் கொல்வதென்றால் அதில் எவ்வளவு களிப்பு. தாம் தினம் தினம் தின்று அழிவதோடமைபாது பிறரைக் கட்டாயப் படுத்திக் கழுத்தறுக்கச் செய்து அவரையும் காதகராக்குதல் என்ன கொடுமை! இவர்கட்கு உய்வேது! இவர்களை நினைக்கும் பொழுது என்மனம் நடுங்குகின்றது. ஒரு சமயம் எந்தப் பாழ் நரகிற்குப் போய் உழலப் போகின்றனரோ வென்ற இரக்கமும் உண்டாகிறது. இவர்கள் ஊழ்வினைக்கு யான் என் செய்ய வல்லேன். அன்றி, பாபமும் பழியும் ஒருபுற மிருக்க, ஒருவர் வீட்டிற்குப் போய் என் வயிற்றிற்குப்புலால்போட்டுநிரப்பு என்று கேட்பதுதான் உலகத்திலுள்ளவெட்கம் எல்லாவற்றுள்ளும் தலையாய வெட்கம் என்பதுஎனதுகருத்து. நிற்க,

போடச் சொல்பவர் ஒருபுற மிருக்கட்டும். எவர் எவ்வளவு குட்டிக்கரணம்போட்டாலென்ன? விருந்துவைப்போர், தம் கொள்கைக்கு விரோதமானதைச் செய்யத் துணியலாமோ? பகுத்தறிவோடு புலாலுணவு போக்கிய அவர், பிறர் தூண்டுதலுக்காக அதனைச் செய்யின், புலான் மறுத்தபயனை அவர் எங்ஙனம் பெறுவார்? அவர் உண்டாலென்ன? பிறரை உண்பித்தாலென்ன? "வியபிசாரம் செய்தலாகாது; பிறரைச் செய்விக்கலா" மென்றல் பொருந்துமோ? தைரியம் வேண்டாமோ? எல்லாவற்றிற்கும் சரிசரி யென்று தலையசைத்தல் ஆகுமோ? நாகம் புகுந்தபாராக விருப்பவர் அழைத்தால் அதனின்றும் விடுபட வெண்ணியவர் துணைக் கேகலாமோ? புலாலுண்பதில்லையென இவர் கொண்ட விரதத்தின் பொருள்தா னென்ன? கருணையினால் இவர் புலான்மறுத்தாரென்பது வீண்வார்த்தை யன்றோ? கருணை யிருக்குமேல் தன்னால் ஆக்கமுடிந்தவுயிரைக் காத்தன்றோ தீரல் வேண்டும். தான் புசியாதிருத்தல் ஒன்று மட்டினும் அமையுமோ? தன்னுயிர் போயினும் வேறுயிர் கோறத் தான் உடன்படலாமோ? புலான்மறுத்தோர் மற்றவர்க்கும் புத்தி கற்பிக்க வேண்டிய திருக்கத் தானே செய்தல், நன்று! நன்று!! புலான் மறுப்பது ஏன் என்றால் கருணையினாற்றான் என்றுதான் சொல்வர் அறிஞர். ஆனால், இச்செயலை நோக்கும் பொழுது அம்மனம் கூற முடியவில்லை. தம் வாயினுள் மட்டினும் நுழையாதிருந்தாற் போதுமென்பது மூடக்கொள்கை.

கருணையினால் புலான் மறுத்த எனது நண்பர் சிலர், புலாலுண்போர் வீடுகளிற்கூட ஆகாரம் புசித்தல் கூடாதென எண்ணுகின்றனர். ஆனால், புலால் எடுக்கும் சமயங்களில் அவர் நெருங்கிய பெரிய பந்துவாக விருந்தபோழ்தினும் அவர் வீட்டில்தாம் தனியாகச் சமைத்த சைவ ஆகாரம் கூட உண்பதில்லையெனச் சில அன்பர்கள் உறுதிகொண்டு அதன்படி நடந்து வருகின்றனர். நமது சமூகத்தில் புலாலுண்போர் வீட்டில், தண்ணீர்கூட, நமது சமூகத்திற் பிறந்தோரே அருந்தாதிருக்க வேண்டிய காலமொன்று வருமென்ற நம்பிக்கை எனக்குண்டு. பண்டைநாளில் ஜாதி வகுத்ததே இத்யாதிகுணஞ் செயல் கொண்டுதான். அதனை விரிக்கின் கரைகடந்து செல்லும்,

இத்தகைய விரதங்களை மேற் கொள்ளாவிடினும் புலான் மறுத்தோர், தன் வீட்டில் எதை முன்னிட்டும், எவர்க்கும் புலால் போட்டு யாக்கை நிரப்பித் தான் பாபத்தைத் தேடிக்கொண்டு நரகிற்கு ஆளாதல் ஆகாது. தைரியமாக—சாந்தமாகக் கண்டிப்பாக முடியாதென்று கூறிவிடலாம். அவ்வாறின்றி, அச்சத்தாலோ பிறவாலோ இந்நோன்னை உயரிய கொள்கையை விடுதல் வெட்கம்! வெட்கம்!!

---

## உலக நிகழ்ச்சி.

மகாத்மா சிறைசென்று இன்றோடு ௪௱௬௰௪ நாட்களாகின்றன. (ஹூ ௧ நாட்கள் ௬௮)

* * *

முன்னர்த் தெரிவித்தபடி சேலத்தில் ஜூன்மீ ௪௨௨ தமிழ் மாகாண மகாநாடு நடைபெறுதாம்.

* * *

இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் சைவர்கள் பெருகி வருகிறார்களாம். இது சாலச்சிறந்த செய்தியாகும்.

* * *

பாரதியார் பாடல்களைப் பள்ளியில் பாடமாக வைக்கக் கூடாதென்று திருநெல்வேலியில் அரசாங்க உத்தரவு பிறந்திருக்கிறதாம்.

* * *

இந்தியாச் சட்ட சபைக்கு பண்டித நேருவும் சித்தரஞ்சனதாஸரும் அபேட்சகர்களாக நிற்கத்தீர்மானித்திருக்கிறார்களாம்.

* * *

பிரிட்டிஷ் பிரதம மந்திரியாகிய போனர்லா, தமது தேக அசௌகரியத்தினால், மந்திரிப் பதவியை ராஜீநாமாச் செய்துவிட்டார். மன்னர் பிரானும் அங்கீகரித்துவிட்டார்.

* * *

ரெங்கூனில் நடந்த கலவரத்தில் நம்மவரை விலங்கிட் டழைத்துச் செல்லவில்லை யென்றும் இப்பொழுது சமாதானமாகப் போய் விட்டதென்றும் செய்தி பெட்டுகிறது.

* * *

ஸ்ரீ திலகர் ஸ்வயராஜ்ய நிதிக்கு மேமீ ௨௨ வரை தமிழ் நாட்டில் வசூலாகி யிருப்பது ரூ ௬௬,௨௬௩-௮-௨ என கஸ்தூரி ரங்கய்யங்கார் அறிவிக்கிறார்.

* * *

ஸ்ரீமத் சரோஜனி தேவி தமிழ் நாட்டில் பிரசாரஞ் செய்துகொண்டு வருகிறார். சட்டசபைப் பிரவேசத்திற்கு எதிர்ப்பிரசாரம் கூடாதென அவர் கூறிவருகிறார்.

* * *

கொழும்பிலிருந்து வெளியாகிக் கொண்டிருந்த "தேசநேசன்" என்ற தினப்பத்திரிகை இடையில் நின்றிருந்தது. இப்பொழுது பெரிய அளவில் ௪-பக்கங்களாக வந்துகொண்டிருக்கிறது.

* * *

வைத்திய வரதராஜுலு நாயுடு எந்தக் கட்சியையும் சேராது ஒரு தனிக் கட்சியை உண்டாக்கப் போகிறாராம். அக் கட்சியின் நோக்கம் மகாத்மாவை விடுவிக்க வேண்டுமென்பதேயாம்.

* * *

மகாத்மாவுக்கு வயிற்றுக்கடுப்பு நோய் உண்டாகியிருப்பதாகவும் இப்போது குணமடைந்து வருகிறதாகவும் மகாத்மாவின் அருமைப் புதல்வர் தேவதாஸ் காந்திக்குச் சேலத்திற்கு சிறையதிகாரியிடமிருந்து கம்பிச் செய்தி போந்ததாகத் "தமிழ் நாடு' சாற்றுகிறது.

* * *

ஒரு ரூபாய் நோட்டுகள் ஜனங்கட்கு மிகுந்த அசௌகரியத்தை உண்டு பண்ணுவதாலும் அரசாங்கத்திற்கு அதனால் அதிகச் செலவு ஏற்படுவதாலும் அவைகளை நிறுத்திவிடவேண்டுமென்று இந்திய வர்த்தக சபையார் இந்தியா அரசாங்கத்திற்கு அறிவித்திருக்கிறார்கள்.

* * *

புதிதாக வந்திருக்கும் பத்து ரூபாய் நோட்டில் வருஷம், மாதம், தேதி பொறிக்கப்படவில்லை. இது வரை வந்த நோட்டுக்களில் இவை இல்லாதில்லை ஒரு ரூபாய் நோட்டிற்கூட வருஷம் பொறிக்கப்பட்டிருக்கிறது. இதில் அதுவும் இல்லாததற்குக் காரணம் என்னவோ?

* * *

"நாளைச் சாகப்போகிற கிழவர்கள் ஸ்ரீ பாரதியார் பாடலைப் படியாவிட்டாலும், இனி இந்த நாட்டை ஆளவேண்டிய குழந்தைகளும் சிறுவர்களும் இளந் தமிழர்களும் அவசியம் படித்து இன்பமும் பயனும் அடையவேண்டும்" என லோகோபகாரி பகர்கிறது. நாளைச் சாகப் போகிற கிழவர்கள் கூட பாரதியாரின் வீரப் பாடல்களைப் படித்தால், கூடச் சில நாள் உயிருட னிருப்பார்கள் என்று கூறலாம்.

* * *

தேசபந்து தாஸர் மேமீ ௩௰௨ சென்னைக்கு வருவதாகச் செய்தி விடுத்திருக்கிறார். அவரை, வரவேற்பதில் தமிழ் நாட்டில் அபிப்பிராய பேதம் உண்டாகியிருக்கிறது. வட ஆற்காடு ஜில்லா தேசிய சபை வரவேற்கக் கூடாதெனத் தீர்மானித்தது. அந்த சபையின் செய்கையை வரதராஜுலு மிகவும் பலமாகக் கண்டித்தார். "நவசக்தி" அவர் பாதங்களில் விழுந்து வணங்கச் சொல்கிறது. "சுதேசமித்திரன்" பற்பல காரணங் காட்டி "நவசக்தி"யும் "தமிழ் நாடு"ம் கூறுவது சரியில்லையென மறுக்கிறது. சுதேசமித்திரனைப் பற்றிச் சொல்லவா வேண்டும்?

---

## புதுமையிற் பலபுதுமை.

(நமது நிருபரிடமிருந்து)

இம்மாதம் ௮௨ ஜெயங்கொண்டபுரத்தில் ஊழியர் சங்கத்தின் அங்கத்தினராகிய திருவாளர் மெ. ராம. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்களின் புதல்வன் சிரஞ்சீவி இராமநாதனுக்குக் காப்புக்கட்டுப் புதுமை நடந்தேறியது. நம்மவர் வீடுகளில் புதுமை பல சகஜமாக நடப்பினும் அவற்றுள் யாவும் பழமையாகவே நடைபெறுமன்றி, புதுமை பல் கண்டோமில்லை. இவ்வறிஞர் நடாத்திய புதுமையில் பல புதுமைகள் நடந்தன. இப்புதுமைக் குரிய பிள்ளைக்கு ஆடையனைத்தும் சுத்தக் கதராக அணிந்திருந்தது புதுமை. அன்றிக் காந்திகுல்லாயும் தரித்திருந்தது புதுமையினும் புதுமை. இம்மட்டோ?

புதுமைப் பிள்ளையின் தாய் கூப்பிடப்போகும்பொழுதும் புதுமைக் காலத்திலும் ஏராளமாக சுமைதாங்கிக் கற்கள் போல நகைகள் சுமக்கும் அநாகரீகத்தை இப் புதுமையிற் கண்டோமில்லை தவிர, புனிதக் கதர்ச் சேலையே அணிந்திருந்தது ஒரு புதுமை. புதுமைப்பிள்ளையின் தாயே, விசேஷ நகையும் விசேஷ உடையும் தரியாது எப்பொழுதும் போல உடையும் அணியும் தாங்கியிருந்தமைகண்டு, புதுமைக்கெனப் புதுவேஷந்தரித்து வந்த பெண்கள் வெட்கப் பட்டிருப்பார்களென்பதிலையமில்லை.

இனிப் பங்காளிகள் சுற்றத்தார் முதலிய எவர்க்கும், அமுதிட்டுக் களிப்பித்தது தவிர, கையில் தட்சணை; சாமான்கள் முதலியன கொடுத்து வந்தவர்களைக்கேவலப்படுத்தியனுப்புகிற வழக்கம் அடியோடு நிறுத்தப்பட்டது ஒரு புதுமை.

கட்டிடத்தைக் கண்டாலே அறிஞர்க்கு ஒரு புதுமையாகத் தோன்றும். கட்டிடத்தின் நுழைவாயிலில் மகாத்மா, லோகமான்யர், விவேகானந்த சுவாமிகள் ஆகியவர்கள் உருவங்களிருப்பது இந்நாட்டிற்கு ஒரு புதுமை. உட்சென்றால் சுவரில் தீட்டியிருக்கும் பல மகான்களின் உருவங்களும் அங்கு பொறிக்கப்பட்டிருக்கும் வாக்கியங்களும் ஒரு புதுமை. புதிதாக வேறுவகுப்பில் மணந்தவர்கள் மனைவியரோடு போந்திருந்தமை ஒரு புதுமை.

இப்படி ஒரு புதுமைக்குச் சென்றிருந்தயான் பல புதுமைகள் அங்குக் கண்டேன்.

இப் புதுமையை முன்னிட்டு இன்றையதினம் ஆயிரம் பேருக்கு அதிகமான ஏழை மக்கட்கு அன்னமளிக்கப் போகிறார்கள். புதுமையில் இதுவும் புதுமையே.

---





## பொதுச் செய்தி.

**திருப்பாதிரிப் புலியூர்:**—இவ்வூர் உத்ஸவத்தை முன்னிட்டு சந்நிதி வீதியிலுள்ள ஸ்ரீமத் ஞானியார் மடாலயத்தில் வாணிவிலாச சபையில் வைகாசி ௧௨,௧௩, ௧௪ தேதிகளில் பல அறிஞர்கள் உபந்நியாசங்கள் புரிவார்கள் எனச் சங்க அறிக்கை கூறுகிறது.

* * *

**கண்டவராயன் பட்டி:**—இவ்வூர் ஆத்ம விவேகாநந்த சங்கத்தில் ௨௨ ஸ்ரீமாந், எம். கிருஷ்ண ஐயங்கார் அவர்கள் அவைத் தலைமையில் பல அறிஞர்கள் உபந்நியசித்தார்கள் என, மூ. பெரி. உ. இராமநாதன் செட்டியார் அறிவிக்கிறார்.

* * *

**ஜெயங்கொண்டபுரம்:**—இவ்வூர் திருவாளர் மெ. ராம. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்கள் புதல்வனின் புதுமையை முன்னிட்டு அவர்களின் காந்தி விலாசப் புதிய கட்டிடத்தில் இம்மாதம் ௬௨ மாலையில் திருவாளர் வயிசு. ஷண்முகஞ் செட்டியார்அவர்கள் தலைமையில் திருவாளர்களான பிசு. சுப்பிரமணியன் செட்டியார் அவர்களும் ராய. சொக்கலிங்கமும் சொ. முருகப்பசெட்டியார் அவர்களும் சொற்பெருக்கிட்டார்கள். மேற்படி புதுமையில் கல்லிடைக்குறிச்சி தமிழ்க் குருகுல வித்யாலயத்திற்கு ரூ ௨௫-ம் மகாத்மாவின் சபர்மதி ஆச்ரமத்திற்கு ரூ ௧௦-ம் தேசீய மகாசபைக்கு ரூ ௫-ம் ஹிந்துமதாபிமான சங்கத்திற்கு ரூ ௫-ம் தனவைசிய ஊழியர் சங்கத்திற்கு ரூ ௫-ம் காரைச் சிவனடியார் திருக்கூட்டத்திற்கு ரூ ௫-ம் சிதம்பரம் நந்தனார் பாடசாலைக்கு ரூ ௫-ம் "நவசக்தி"க்கு ரூ ௫-ம் "லோகோபகாரி"க்கு ரூ ௫-ம் "தனவைசிய ஊழிய"னுக்கு ரூ ௫-ம் ஆக, ரூபாய் எழுபத்தைந்து சம்பாவனை செய்துள்ளார்கள் என ஒருவர் எழுதுகிறார்.

* * *

**அரிமழம் ஸ்ரீ கிருஷ்ணசங்கம்:**—இம்மாதம் ௨௨ பரி. சு. சித. க. சுப்பய்யா செட்டியார் தலைமையின்கீழ் செ. ப. பெரி. காசி விஸ்வநாதன் செட்டியார் "நட்பு" யென்பதையும் அ சடையப்பன் "விதியை வெல்லலாகா" வென்பதையும், க. செ. அரு. அண்ணாமலை செட்டியார் "பொறுமை" யென்பதையும், க. சுப்பய்யா செட்டியார் "மூத்தோர்சொல் வார்த்தை யமிர்தம்" யென்பதையும் பேசினார்கள். கா. ச. அ. அ. சடையப்பன் முடிவுரை கூற, வெ. லெ. காசி விஸ்வநாதன் செட்டியார், கடவுள் வாழ்த்துக் கூறினார் என காரியதரிசி கா. ச. அ. அ. சடையப்பன் அறிவிக்கிறார்.

* * *

**சிகாமேட்:**—இங்குள்ள நகரத்தாரவர்களால் நடத்தப்பெற்ற சித்திராபர்வ மகோற்சவத்தன்று பகல் முழுதும் நமது ஏழைச் சகோதரர்களுக்கு அன்னமளிக்கப்பெற்றது. இரவு இந்திரவிமானத்தின் கண் குமரப்பிரான் அலங்காரமாயமர்ந்து மூவார் நகரில் நர்த்தனம் புரிந்த இருபாலர்களும் தேவாரக்கோஷ்டியுடன் திரு நடனம் புரிய திருவீதிகளின்கண் திருவுலாப் போந்து தமதிருக்கை சேர்ந்தருளினர். இன்று இவண் நகரத்தார் விருப்பத்திற்கிணங்கி ஐம்பது கல் அளவு இயந்திர வண்டியில் வந்து திருநடனம்புரிந்த இருபாலர்களுக்கும் எனது நன்றியைச் செலுத்துகின்றேன். மறுநாள் கிட்டங்கிகளில் சைவவிருந்தாகவே நடத்தியது மிகவும்போற்றத்தக்கது. இன்னும் ஏனைய ஊர்களிலும் இக் கொள்கையையே பின்பற்றுமாறு பன்முறையும் வேண்டுகின்றேன் என ஒருவர் தெரிவிக்கிறார்.

* * *

**பாகனேரி:**—இவ்வூர் பில்வநாயகியம்மனுக்கு ஆங்கீரச ஹூ ஐப்பசிமீ ௧௭௨ யில் பிள்ளையார்பட்டிக்கோவிலிலுதித்தஆத்தங்குடி முத்துப்பட்டணம் சின்னையாசெட்டியாரவர்கள் குமாரர் சிதம்பரஞ்செட்டியார் செய்துவைத்திருந்த வெள்ளிக் கவசம் (அங்கி) தேய்ந்துபோயிருந்ததை இப்போது மேற்படியார் குலத்துதித்தோர்கள் ரூபாய் ஆயிரம் எடுத்து வெள்ளி வாங்கிப் புதிதாகச்செய்து இவ்வாண்டு சித்திரைத் திங்கள் இருபத்தொன்பதாம் நாள் சுக்ரவாரத்தன்று அம்மனுக்கு அபிஷேகம்செய்து அணிவித்தார்கள் என ஒருவர் தெரிவிக்கிறார்.



நாளென்செயும்! வினைதானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
றென்செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தாலங்காரம்

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி வைகாசிமீ கஉ

## ஊழியர் சங்கமும் அபிமானிகளும்.

பண்டைப் பெருமைகள் பல வாய்ந்த நமது தனவணிக சமூகத்தின் முன்னேற்றங்கருதிக் காணப்பட்டது நமது ஊழியர் சங்கம் என்பது உலகறிந்தது. இந்நாள் நமது நாட்டில் பற்பல சங்கங்களிருப்பினும் யாவற்றுள்ளும் திண்மையுடையது ஊழியர் சங்கம் என்று கூறுதல் தவறாகாது. அநேகர் அசாத்யமெனக் கருதுகின்ற பல தீர்மானங்களைச் சர்வசாதாரணமாகச் செய்கையிற் காட்டிவருதலே இதற்குப் போதிய சான்றும்.

இற்றைஞான்று நமது சமூகத்தில் உலகப்போக்கை ஒரு சிறிதும் ஓராது முட்களும் கற்களும் நிறைந்த ஒரு சீர்கேடுற்ற பழம்பாதையில் சென்று கொண்டிருப்போர் ஒரு புறமிருக்க, நியாயவழியில்பழமையே யெனினும் புதுமையே யெனினும், நல்லன கொண்டு தீயன போக்கி, எங்கும் எவர்க்கும் எக்காரணம்பற்றியும் அஞ்சாது, புகழ்ச்சியேனும் இகழ்ச்சியேனும் பொருட்படுத்தாது, சமூக நலனே வாழ்நாளின் பயனெனக் கொண்டு, அதினும் தற்காலத்து இன்றியமையாது செய்து தீரவேண்டியதாக முன்னிற்கும் கடமை திருமணமாற்றலே என்பதை யுணர்ந்து, அது செயப்புகுந்த ஊழியர் சங்க உயரிய கொள்கையில் அனுதாபமுள்ளோரில் அநேகர் ஊழியர்சங்கத்திற் சேர்ந்துழைக்கமுடியாதெனக் கருதுகின்றனர். காரணம் சங்கத்தீர்மானங்கள் கடுமையென்றும் அவற்றை அநுட்டிக்க முடியாதென்று அவர்கள் எண்ணுவதுமே யாகும். நமக்குத் தீர்மானங்களை அநுட்டித்தல் சாதாரணமாகத் தோன்றினும் எல்லோரையும் நாம் அத்தனை தூரம் எதிர்பார்த்தல்முடியாதகாரியமன்றோ? எனவே, இக்காரணத்தால் அபிமானிகள் சங்கத்திற் சேர்ந்துழைக்கமுடியாதுபோகிறது. இவர்களும் சங்கத்திற் சம்பந்தப்பட்டுக் கூடுமானதைச் செய்ய இதுவரை ஒருவழியில்லாதிருந்தது. இதற்கு ஒரு வழியேற்படுத்தி, தொண்டுசெய்யும் எண்ணமுடையார்க்கும் உழைப்பில் பங்கு கொடுக்கவேண்டுவது இன்றியமையாததாகும்.

இதன் பொருட்டு இந்நாள் இருக்கும் தீர்மானங்களை மாற்றி வழவழவென்று ஆக்குதல் சரியன்று! முடிந்தவர்கள் அங்கத்தினராகச் சேர்ந்து அதனை அநுட்டிக்கட்டும். அதனை அனுட்டிக்க முடியாதெனவெண்ணுவோர், முதலில் அபிமானியாகச் சேர்ந்துகொள்ள இடந்தந்தால், அதினின்றும் அவர்கள் மனத் திண்மை பெற்று அங்கத்தினராக ஏதுவுண்டு என வெண்ணி இம்மாதம் கூஉ ஜெயங்கொண்டபுரத்திற் கூடிய ஊழியர் சங்க மகாசபையில் அநுதாப முள்ளோரை அபிமானிகளாகச் சேர்த்துக் கொள்வதெனத் தீர்மானித்திருக்கின்றனர்.

இனி நமது சமூகத்தில்- சங்கக் கொள்கையில், அபிமான முள்ளோர் கால தாமதமின்றி விண்ணப்பஞ் செய்து கொள்ளலாம். இவர்கட்கு வேறு நிபந்தனை யொன்றுமில்லை யெனினும் "தாம் பெற்ற பெண்ணுக்குப் பணம் பெற்று மணஞ் செய்து கொடுத்தல் ஆகாது; தாம் கொடுத்துப் பெண் கொள்தலும் ஆகாது" என்ற நிபந்தனை ஒன்றுண்டு. இதுவு மின்றி ஊழிய சங்கத்தின் கொள்கையில் அபிமானமுண்டென்று கூறுதல் பேச்சளவேயன்றோ?

இவ் வபிமானி யென்ற முறையில் அனைவ நம் சேரலாம். "பெண்ணுக்குப் பணம் கொடுக்கும்—வாங்கும் வீடுகளில் உணவுண்டல் முதலியன ஆகா; புலாலுணவு கூடாது" எனபனவாதி தீர்மானங்களை இவர்கள் அநுட்டிக்க வேண்டுமென்று விதியில்லை.

இவ் வபிமானிகள் ஆறு க-க்கு கட்டணம் ரூபாய் பதினைந்துக்குக் குறையாது செலுத்துதல் வேண்டும். இவ் வபிமானிகட்கும் நமது தனவைசிய ஊழியன் பத்திரிகை இனமாக அனுப்பப்பெறும்.

சங்க அபிமானிகாள்!

வருக! வருக!! விண்ணப்பந் தருக!!! அபிமானிகளாகப் பதிவு செய்யப் பெறுக! பெண்ணிற்குப் பணம் பெறுதல் கொடுமையென்ற அபிப்பிராய மிருக்குமானால்—எண்ணிறந்த சகோதரர்கள் மணம் பெறாது வருந்துதற்கு நிவர்த்தி செய்யவேண்டுமென்ற இரக்கச் சித்தமிருக்குமானால், எட்டுணையுந் தாமதியாது விரைந்து வருக!

விண்ணப்பப் பத்திரம் வேண்டுவோர் நமக்கேனும் காரியதரிசிக்கேனும் எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

---

## பின் பற்றுங்கள்!

நல்லகாரியத்தை ஒருவர் செய்வாரானால்—அது அறிஞர் அங்கீகரிக்கத்தக்கதாக விருக்குமானால்—அதனால் பல்லாற்றானும் பல சிரமங்கள் நீங்குமானால், அதனை உடனே பின்பற்றுவதில் என்ன ஆட்சேபம். இக்காலை நமது சமூகத்தார் தங்கட்குத் தாங்களே சிரமத்தைத் தேடிக்கொண்டு துன்பப்படுகின்றனர். புதுமையினும் கல்யாணம் முதலிய வற்றினும் நம்மவர் வீணேபடும் சிரமத்திற்கு அளவில்லை. அநாகரிகப் பழக்க வழக்கங்களை யெல்லாம் ஒழிக்க வேண்டுமென்று நாம் பன்னாட்களாகக் கூறி வருகிறோம்; அவற்றில் ஒரு சிலவற்றை வரைப்படுத்தி அநேகம் ஊர்களில் தீர்மானங்கள் செய்தார்கள். அவைகளும் இப்பொழுது இருக்குமிடந் தெரியவில்லை. அவைகள் போனாலென்ன? இருந்தாலென்ன? தீயவர் எப்பொழுதும் தீறவே யெண்ணுவர். நல்லவர்கட்குத் தீர்மானங்கள் எற்றுக்கு? நல்ல காரியத்தைக் கட்டுப்பாடு இருந்தாற்றான் செய்யவேண்டும்? ஒவ்வொருவரும் தாமாகவே செய்துகொண்டு செல்லலாமன்றோ?

விசேஷங்களில் அதிகமாகக்கறி வைத்தல் வேண்டா மென்பதற்கு ஓர் தீர்மானமா வேண்டும்? கையில் பணங்கொடுக்கா திருந்தாலென்ன? ஆடம்பரங்களை நிறுத்தினாலென்ன? வண்டியில் சீனி மூட்டையை ஏற்றிக் கொண்டு நமது பெண்கள் பகல் கஉ மணிவரை பல்கூடத்துலக்காது பட்டிக்காட்டு வியாபாரிமாதிரியாக வீடு தவறாது அளந்தளந்து போடா விட்டாலென்ன? இன்னோன்னவற்றிற் கெல்லாம் தீர்மானங்களா வேண்டும்? நல்லெண்ண முள்ளவர்க ளெல்லாம் தாமே அநாகரிகங்களை யகற்ற தைரியமாக ஆரம்பித்து விட்டால், மற்றவர் வெட்கப் பட்டுத்தாமும் நிறுத்தி விடுவர். ஆடம்பரங்கள் பெருமை தரும் என்பது போய், அவைமிகவும் சிறுமையுடையதென ஜனங்கள் எண்ணும் படி செய்து விட்டால் அவைதாமே ஒழிந்துவிடும். அகற்று நல்லெண்ண முடையார் "நல்லகாரியம்தான்; ஆனால் முடியவில்லை" என்று சொல்வதை இன்றே—இன்னே விட்டு விடுதல் வேண்டும். செய்கையிற் காட்ட ஆரம்பித்து விடல் வேண்டும்.

சமீபத்தில் திருவாளர் மெ. ராம. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் நடாத்திக் காட்டிய புதுமை அறிஞர் உள்ளத்தைக் களிப்பித்தது. அப்புதுமையைப் பின்பற்றுங்கள்! அநாச்சாரத்தை அகற்றுங்கள்! சத்விஷயங்கட்குச் சம்பாவனை செய்யுங்கள்! ஏழைகட்கு உணவிடுங்கள்! புன்புலாலைக்கையினாலுந் தொடாதீர்கள்! அந்நிய ஆடையை அகற்றுங்கள்! கதருடுத்துக்களியுங்கள்! இரவல் நகையை வாங்கி இடர்ப்படாதீர்கள்!

---



## இடி முழக்கம்.

### சம்பாவனை.

ஜெயங்கொண்டபுரம் திருவாளர் மெ. ராம. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்கள், தமது புதல்வன் இராமநாதனுக்கு நடாத்திய காப்புக் கட்டுப் புதுமையில் நமது பத்திரிகைக்கு ரூ. ரு சம்பாவனைசெய்துள்ளார்கள். அவர்கட்கு நன்றி செலுத்துகிறோம்.

### மநுதர்மசாஸ்திரம் ராட்டினஞ் சுற்றச்சொல்கிறது.

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சார்ய சுவாமிகள், ராட்டினத்தைப் பற்றிக்கூறிய அபிப்பிராயம் வருமாறு:—

"மநுதர்ம சாஸ்திரத்தில் ஓர் ஸ்த்ரீயானவள் புருஷனையும் தன் புத்திரனையும் இழந்து ஜீவனத்திற்குக் கதியில்லாமல் இருக்குங்கால், கைராட்டில் நூல்நூற்று ஜீவன உபாயங்களைத் தேடிக்கொள்ளலா மென்று சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் பிராம்மணர், தங்கள் எக்ஞோபவிதத்தை கைராட்டின் நூலில் தான் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. கைராட்டை ஸ்த்ரீ புருடர் குழந்தைகள் ஒவ்வொருவரும் கால்மணிநேரமாவது சுற்றிக் கதரபிவிர்த்தி செய்யவேண்டும்." இதனால் புருஷனை யிழந்த பெண், தம்கற்புவழுவாது செய்யத்தக்க தொழில் ராட்டினத் தொழில் என்பது கிடைக்கின்றதன்றோ?

### குருகுலத் தலைவரென் றெழுதலாம்.

திருச்செங் கோட்டினின்றும் வெளியாகும் "தாய்நாடு" என்ற பத்திரிகை தமிழ்க்குருகுல வித்யாலயத் தலைவராகிய பெரியார் வ. வெ. சு. ஐயரவர்களின் அரிய கட்டுரைகளை வாரந்தோறும் தாங்கிக் கொண்டு வருகிறது. அதன் தலைப்பில் பெரிய சன்டைக்காய் எழுத்தில் "தேசபக்தன் ஆசிரியராயமர்ந்திருந்த திருவாளர் வ. வெ. சு. ஐயர் எழுதுகிறார்." எனப்பொறிக்கப்படுகிறது. முன்னே அமர்ந்திருந்ததைக் காட்டினும் இப்பொழுது இருக்கின்ற பதவியை எழுதுதல் சிறப்புடைத்து. அன்றி, பத்திராசிரியர் என்றெழுதுவதைக் காட்டினும் குருகுலத்தலைவரென் றெழுதுதல் மிகவும் பெருஞ் சிறப்புடைத்தென நமக்குத் தோன்றுகிறது. தாய்நாடே! யோஜித்து, கூடுமாயின் ஏற்றுக்கொள்க!

## தந்திச்செய்தி.

பினாங்கு வைகாசிமீ ககஉ
சென்னை உண்டியல் விலை நூற்றெழுபத்து ஐந்து.
சயம்விலை தொண்ணூற்றெட்டு.
ரப்பர் விலை அறுபத்தெழு.

### விலங்கிட வில்லையாம்

சின்னாட்கட்கு முன்னர் செங்கனில் நடந்த கலவரத்தில் நம்மவர்க்கு விலங்கிடப் பெற்றது இல்லையா யென்பதைப் பற்றி அநேகருக்குச் சந்தேக மிருத்தல் கூடும். விலங்கிட வில்லையென அங்கிருந்து வந்த செய்தி கூறுகிறது. நம்மவரில் ஒருவருக்கும் விலங்கிடாமை பற்றிச் சந்தோஷமே. விலங்கிடப் பெற்றபோதினும் விலங்கிடப்பட்டவர்களைத் தாழ்வாக நாம் கருதப் போவதில்லை. இந்தப் பூச்சாண்டி நம்மை விட்டு நீங்கினால்தான் மற்றவர் நம்மிடம் சரியாக நடந்து கொள்வர்.

### செட்டியார்.

நம்மவரைக் குறிப்பிடும்பொழுது செட்டியார் என்று குறிப்பிடுதல் வேண்டுமென்று நாம் போராடி வரும்பொழுது சில பத்திரிகைகள் அதற்கு விரோதமாக எழுதுகின்றன. ஒரு வகுப்பாரைக் குறிப்பிடும் பொழுது பெருமைபடப் பேசவதே தன் மதிப்புள்ள பத்திரிகைகட்கும் அறிவுள்ள பத்திராசிரியர்கட்கும் அழகு என்பதை நாம் சொல்லவா வேண்டும்?

### பிரசுரிக்கப் படாதவை.

"நட்பு" தலைப் பெயருக்கும் விஷயத்திற்கும் சம்பந்த மில்லை. "ஒரு மறுப்பு" இது கண்டமாணிக்கம் சிவன் கோவில் விஷயமாக முன்வந்த ஒன்றை மறுக்கின்றது. முன்னே யெழுதிய எழுத்தும் இப்பொழுது மறுப்பு எழுதியிருக்கும் எழுத்தும் ஒருவருடையதே. பொய்யான விஷயங்களை யெழுதும் இவருடைய சமாச்சாரங்கள் இனிப் பிரசுரிக்கப்பட மாட்டா.

## உள்ளூர்ச் செய்தி.

இரங்கூன் உண்டியல்வட்டம் ௧-௧௨-0.
சென்னை உண்டியல் வட்டம் 0-௮-0.

கிராம பரிபாலன சபையின் ௧௯௨௧-௨௨ வருத்திய தொழில் வரி:—கிராம பரிபாலன சபையின் தலைவராக விருந்த மகா-ா-ா-ஸ்ரீ சிமு. அரு. முத்துராமன் செட்டியார் அவர்களால் ௧௯௨௧-௨௨ வருத்திற்கு விதிக்கப்பட்ட தொழில் வரியைரத்துச் செய்யும்படியாக இச் சபையார் செய்த வேண்டுகோளை ஜில்லா சபையார் ௫-௪-௨௩வ கூட்டத்தில் நிராகரித்து விட்டார்கள். ஆகையால் ஷை வரியை வசூலிக்க வேண்டியது அவசியமாகிறது. இந்தத் தொழில் வரியைச் செலுத்த வேண்டியவர்கள் ௧௯௨௩ வரு ஜூன்மீ ௧௫உக்குள் செலுத்திவிட வேண்டுமென்று இதனால் தெரிவிக்கப் படுகிறது. தவறினால் சட்டப்படி வசூல் செய்யப்படும் என்று சபைத் தலைவர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியார் அறிவிக்கிறார்.

சங்கீத ஸபை:—கடந்த திங்கட்கிழமை மாலை ௬-மணிக்கு இவ்வூர் வாசகசாலையில், பத்திரப்பதிவு அதிகாரிமகா-ா-ா-ஸ்ரீ என். எஸ். பரமேசுவர சாஸ்திரி பி. ஏ. அவர்களின் அக்ராஸனத்தின்கீழ் கூடிய பொது ஜனக்கூட்டத்தில் இந்த நகரில் ஸங்கீத ஸபையொன்று ஸ்தாபிக்கப் பெற்றது. வருஷத்தில் எட்டுக் கச்சேரிகளுக்குக் குறையாமல் ஏற்பாடு செய்வதென்றும், வருஷம் ரூ. ௨௫ சந்தாக் கொடுப்பவர்கள் போஷக அங்கத்தினர்களாவது என்றும், ரூ. ௧0 கொடுப்பவர்கள் சாதாரண அங்கத்தினர்களாவது என்றும் திட்டத்தை ஏற்படுத்தி, அங்கத்தினர்களை சேர்ப்பதற்கு ஒரு கூட்டம் நியமிக்கப்பட்டது. இந்தக் கூட்டத்தார்கள் அங்கத்தினர்களைக்கூட்டியானதும், கூடும் இன்னொரு ஸபையில் உத்தியோகஸ்தர்களை நியமிப்பதென்று தீர்மானமானது. கச்சேரிகள் நடைபெறுங்கால், முதல் வகுப்பு இடத்தில் போஷக அங்கத்தினர்களும், ௫ ரூ அநுமதிச்சீட்டுப் பெற்றவர்களும் உட்காருவதென்றும், இரண்டாவது வகுப்பு இடத்தில் சாதாரண அங்கத்தினர்களும் ௨ரூ. அநுமதிச்சீட்டுப்பெற்றவர்களும் உட்காருவதென்றும், மூன்றும் வகுப்பு இடத்தில் ௧ ரூ. அநுமதிச்சீட்டுப் பெற்றவர்களிருப்பது என்றும் தீர்மானமாயிற்று. சங்கீதத்தில் அபிருசியுள்ள சகல கனவான்களும் இந்த ஸபையின் அங்கத்தினர்களாகச் சேருவாரென்று நம்புகிறேன். என, நா. ஸ. வெங்கட்டராம அய்யர் அறிவிக்கிறார்.

## மதிப்புரை.

விமலாதேவி.

இது சரித்திர சம்பந்தமான ஒரு தமிழ் நாவல். இதனை மொழிபெயர்த்தவர்; பாண்டிச் சேர்ந்த சேந்தமங்கலத்துள்ள பாலையம் பாலிகா பாடசாலைத் தலைவர் திருவாளர் ஆர். அப்பாத்துரை ஐயரவர்கள். இதனைப் பதிப்பித்தோர் திருச்சி தேசியக் கலாசாலைத் தலைமைதமிழாசிரியர் திருவாளர் ம. கோபால கிருஷ்ணையரவர்கள். இதன் விலை ரூ. ௧—௨—0 வேண்டுவோர் பதிப்பாசிரியர்க்கு எழுதிப் பெறுதல் வேண்டும.

இது ஒழுக்கத்தைக் கெடுக்கும் தற்கால நாவல்கள் போன்றதல்ல. சுமார் ௩௫0 ஆண்டுகட்கு முன்னர் நடந்த சரித்திரத்தையே நாவல் வடிவாக எழுதப் பெற்றிருக்கிறது. இந்நாவலில் ஆங்கஸீபின் கொடூரமான அரசாட்சியும் ரஜபுத்திரர்களின் அஞ்சாமையுடைய தீரமும் நன்றாகக் கூறப்பட்டிருக்கின்றன. இந்நாவலின் முக்கிய அம்சம் ராஜபுத்திரர்களாகிய ஆண்களும் பெண்களும் மானத்தையே பிரதானமாகக் காப்பாற்றியதும் அதன் நிமித்தம் அரங்கஸீபின் நினைத்தற்கும் அஞ்சத்தக்க எந்தக் கொடுஞ்செயலுக்கும் அஞ்சாது ஒவ்வொரு விநாடியும் உயிரையும் இழக்கத்தயாராக விருந்ததுமே. கதாநாயகியாகிய விமலையின் வீரமும், மற்றும் இக்கதையில் வரும் இந்திரையின் தீரமும் பெருந்தந்திரமும், சந்திரமதி முதலிய பெண்களின் அஞ்சாமையும் இயம்புந் தரத்ததன்று! இதனை அனைவரும் கட்டாயம் படிக்க விரும்புகிறோம்.

கதாமாலிகா.

இது ஒருமாதசஞ்சிகை. இதற்கு பத்திராதிபர் எஸ். எஸ். அருணகிரிநாதர் இதன் நோக்கம் நல்ல ஒழுக்கத்தைப் போதிக்கக் கூடிய நாவல்களைத் தொடர்ந்து வெளியிடுவதென முதற் சஞ்சிகையினின்றும் அறியக்கிடக்கின்றது. இதன் முதல் இதழில் "கடவுள் வணக்கம்" "நோக்கம்" "நிபந்தனைகள்" முதலியன ஏழு பக்கங்களினும் "வஸந்தா" என்ற ஒரு நாவல் ௩௨ பக்கங்களினும் அதன்பின் அநேகம் பக்கங்களில் விளம்பரங்களும் வந்துள்ளன. இனிவரும் ஒவ்வொரு மாதமும் ௪௪ பக்கங்கள் நாவலும் ௧௬ பக்கங்கள் பிற விஷயங்களும் வருமாம். வேண்டுவோர் "காமாட்சி விலாசப் புத்தக சாலையார், வெப்பேரி, சென்னை" என்று எழுதிப் பெறலாம்.

இரண்டுபெண்மணிகள கதை.

இவை, கற்புடைப்பண்டை மக்ளிர் இருவரின் கதைகள். இரண்டும் தனித்தனியாக உள; இச்சிறு புத்தகங்கள் இரண்டினுள் ஒன்று தன்கிழ மணவாளனை அவன் விருப்பத்திற் கிணங்க வேசியில்லம் சேர்த்து, இவ்வுலகை விடியாதிருக்கவும் செய்யும் ஆற்றல்படைத்த நளாயினியின்கதை. மற்றொன்று இறந்து போன கணவனைப் பிழைப்பித்த—செயற்கருஞ் செயல் நிகழ்த்திய உத்தமியாகிய சாவித்திரியின்கதை. கதைகள் நன்றாக எழுதப்பட்டிருக்கின்றன. இயற்றியவர் திருவாளர் கோ. வைத்தியலிங்கப்பிள்ளையவர்கள். இவைகளைப் பெண் மக்கள் ஒவ்வொருவரும் கட்டாயம் படித்தல் வேண்டும். நளாயினிகதை விலையணா. ௨, சாவித்திரிகதை அணா ௩, வேண்டுவோர் "ஜி. வி. அண்ட் சன்ஸ், காரைக்குடி" என்ற விலாசத்திற்கு எழுதிப்பெற்றுக்கொள்க!

## திலகர் ஸ்வராஜ்ய நிதி.

௧௯௨௩வரு மேமீ ௨௨உ வரை ஜில்லா வாரியாக வசூலிக்கப்பட்ட தொகையின் விபரம் பின்வருமாறு.

| ஜில்லா. | வசூல் தொகை. |
|---|---|
| ௧ சென்னை (நகரம்) | ௪,௨0௯-௨-௧௧ |
| ௨ செங்கல்பட்டு | ௧,௨௭௫-௩-௧௧ |
| ௩ தென் ஆர்க்காடு | ௨,௪௨௨-௪-௯ |
| ௪ வட ஆர்க்காடு | ௭௧௩-௪-0 |
| ௫ தஞ்சாவூர் வடக்கு | ௨,௫௧௯-௧௪-௨ |
| ௬ தஞ்சாவூர் தெற்கு | ௪,௬௬௧-௧௧-௩ |
| ௭ திருச்சினப்பள்ளி | ௫,௧௭௯-0-௫ |
| ௮ புதுக்கோட்டை | ௧௧௫-௧0-0 |
| ௯ மதுரை வடக்கு | ௪,௮0௨-௯-௬ |
| ௧0 மதுரை தெற்கு | ௯,௬௮௨-0-0 |
| ௧௧ இராமநாதபுரம் | ௧,௮௨௪-௮-0 |
| ௧௨ திருநெல்வேலி | ௩,௫௧௧-௧௧-௯ |
| ௧௩ கோயம்புத்தூரும் நீலகிரியும் | ௩,0௮௧-௧-௪ |
| ௧௪ சேலம் | ௩,௫௭௮-௫-௬ |
| ௧௫ தமிழ்நாட்டிற்கு வெளியே | ௧,௬௯௯-௬-௮ |
| மொத்தம் ஜில்லாக்களினால் செலுத்தப்பட்டது. | ௪௯,௨௬௩-௮-௨ |

எஸ். கஸ்தூரிரங்கய்யங்கார்.
பொக்ஷதாரர்.

## தனவைசிய ஊழியர் சங்கத்திற்கு சம்பாவனை.

ஜெயங்கொண்டபுரம் திருவாளர் மெ. ராம. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் புதல்வன் இராமனாதன் புதுமையில் ரூ. ௫ நமது சங்கத்திற்குச் சம்பாவனை செய்துள்ளார்கள். அவர்கட்கு நன்றி செலுத்துகிறேன்.

சு. ராம. பழனியப்பன்.
காரியதரிசி,



## சுத்தவீரன் எழுதுகிறார்:—

எனது நண்பர்.

மனிதர்கட்குள்ளே பலமாதிரியானவர்கள் இருக்கின்றார்கள். ஒருவரைப் போல மற்றொருவர் இருப்பது கிடையாது. ஒருவர் எண்ணம் போல மற்றொருவரின் எண்ணம் இருப்பதில்லை. எல்லா விஷயங்களிலும் ஒருமனப்பட்ட இருவர் இருப்பதுகூடத்துர்லபம். இது இயற்கை.

மனிதருள் பலர் கெட்டகாரியஞ் செய்கின்றனர். சிலர் நல்ல காரியம் செய்கின்றனர். நல்லனபுரிவோர் தீயனபுரிவோரை நல்வழிப்படுத்த வேண்டியது அவர்கள் கடமை. கடமையைச் செய்யும் பொழுது பலர்க்கு அது சிரமமாகத் தோற்றலாம்.

ஒருவர் கட்குடிக்கின்றாரென்று வைத்துக்கொள்வோம். அது வேண்டாமென்றால் அவருக்குத் துன்பமாகத்தான் இருக்கும். அவர் தாம் அறியாது செய்த அதை ஒழிக்க வேண்டுமே தவிர, தமக்கு நல்லது சொல்பவர் மீது கடிதல் ஆகுமோ? தம்மிடம் குற்றமில்லை யானால் மற்றவர் சொல்லாதிருப்பர். எவரெவர் குற்றங் கூறினும் வந்தனத்தோடு ஏற்றுக்கொண்டு நல்வழியிலே பழகுதலே அறிஞர்க்கழகு சிற்க,

எனது நண்பரொருவர் இருக்கின்றார். அவரைக் கொஞ்சம் புத்திசாலி யெனவும் ஜாதியபிமானி யெனவும் யான் எண்ணியதுண்டு. யான் எண்ணியது தவறு என்பதை அவர் நன்றாக நிரூபித்து விட்டார். அவருக்கு விவாகமாகவிருந்தது. பணம் தந்து விலைக்கு வாங்குவதில்லை பெனப் பகிரங்கமாக நண்பர்களிடமெல்லாம் கூறிவந்தார். தம் நண்பர்கட்குக் கடிதமும் எழுதினார். ஆனால், கொஞ்சநாட்கட்கு முன் இருபத்தாயிரத்துக்கும் அதிகமாகத் தந்து ஒன்று வாங்கினார். அவர் பணத்தை அவர்கொடுக்கிறார். அதில் எனக்கு ஒன்றும் நட்டமில்லை யென்றாலும் எனது நண்பர் வீணே நரகிற்கு ஆளாகித் தவிப்பாரே யென்ற இரக்கமேலீட்டால் தான் நான் பேசவேண்டியதிருக்கிறது. பணம் தந்ததோடும் அவர் நின்றாரில்லை. ஏதோ செய்த காரியத்திற்கு இரங்கி, நண்பர்களைக்காண வெட்கப்பட்டுப் பேசாது மூலையில் இருந்தாரானால் நன்றாக விருந்திருக்கும். குதிரை தூக்கிப்போட்டதுமில்லாமல் குழிவேறு தோண்டிய மாதிரி பெண்ணுக்கு விலைகொடுக்கப்படாது என்று நமது பத்திரிகையில் எழுதுவதற்கும் வருந்தப்படுகிறாராம்.

இது எவ்வளவு புத்திசாலித்தனம்! பேஷ்! பேஷ்!! நன்றாகவிருக்கிறது. பெண்ணுக்குப் பணம்கொடுத்து வாங்கப்படாது என்று பத்திரிகையில் எழுதியது தமக்குப் பிடிக்கவில்லை யென்று பத்திரிகையையும் நிறுத்திவிட்டாராம்! நண்பர் பொருட்டு இரங்காது வேறு என் செய்வது. அவர் பேரில் கோபங் கொள்வதில் பிரயோஜனமில்லை.

நண்பர் தவறை உணர்ந்து வருந்துவதன்றோ அழகு. எத்தனையோ பேர் பெண்ணுக்கு விலை தருகின்றார்; வாங்குகின்றார்; பிற ஏதேதோ செய்கின்றார். அவர்கட்கெல்லாம் தனியே ஒரு அத்திபாயமா கொடுக்கின்றேன்? இல்லை. எனது நண்பர் இனியேனும் நல்லறிவு பெறவேண்டு மென்பதற்காகவே இவரை இங்கு கொண்டுவந்து விட்டேன்.

நண்பரவர்களே!

தாங்கள் எனக்கு நண்பரென்பது கொண்டு, தாங்கள்விலைதந்து வாங்கியமைக்காக, தாங்கள் செய்த காரியம் சரி. எல்லோரும் பெண்ணுக்கு விலைதந்து வாங்குங்கள் என்று யானும் எனது சகாக்களும் கூற முடியுமா? ஏனோ தாங்கள் இதனைச் சற்றுஞ் சிந்திக்கவில்லை. "உம்" என்றால் பத்திரிகையை நிறுத்தி விடுதல்தான் கடைசிக்காரியம் போலும்! இது மதியுடையார் செயலாகுமோ? தாங்கள் ஒரு பத்திரிகையை நிறுத்துவதனால் என்ன காரியம் முழுகிப்போய்விட்டது. தாங்களேயல்ல; அனைவரும் சேர்ந்து பத்திரிகையையே நிறுத்திவிடினும் நியாயத்தவறாகப் பத்திரிகை யெழுதுமோ? பெண்ணுக்குப் பணம் பெறுதல்; கொடுத்தல் நிற்கும்வரை அதனை யெழுதாது விடுமோ? ஒவ்வொருவர் செய்கின்ற தவற்றையும் சொன்னால் அவ்வவற்றிற்குரியார் பத்திரிகையை நிறுத்திவிடுவார்களென்று பயந்தால் சீர்திருத்தம் செய்வது எங்ஙனம்?

எனது நண்பரே!

கோபம் வேண்டாம். தவற்றை உணர்ந்து திருந்திக் கொள்தலே சிறப்புடைத்து!

## விகடர் விரிக்கிறார்:—

செவ்வாய்.

நமது நாட்டில் அநேகம் வீடுகளில் செவ்வாய் நடக்கிறது. செவ்வாய் என்பது செவ்வாய்க்கிழமை தேரோடும் விழா என்ற பெயரால் வழங்கப்படுகிறது. இது தர்க்கை அம்சமான அம்மன் கோவிலையொட்டி நடப்பது. இது வருஷம் பிறந்தவுடன் ஆரம்பமாகிப் தொடர்ந்து ஒரு வருஷத்துக்குப்பின் ஒரு வாரகச் சங்கிலிப்பின்னல் மாதிரியாக வரும். ஏகதமாஷ்தான். விருந்துச் சாப்பாடு விதம் விதமாகவிருக்கும். இதில் எத்தனை உயிர்கட்கு உலைவைத்துவிடுகிறார்கள். உயிர் வாங்கும் போர்வழிகள் எந்தபோதும் விடுகின்றாரில்லை. அநேகருக்கு இரண்டுமாதம் தொடர்ச்சியாகச் செவ்வாய்விருந்து நடக்கும். செவ்வாய்ச் சமயங்களில் அயலூர் ஆட்களைத் தெருக்களில் பார்க்கமாட்டார்கள். "எங்கள்வீட்டிலே சாப்பிடுங்கள்! எங்கள் வீட்டிலே சாப்பிடுங்கள்!!" என்றஒலிதான் எந்த பார்த்தாலும் கிளம்பும். செவ்வாய் முடிந்தபிறகும்விருந்துநடக்கும். இக்காறு நாட்கள்வரை ஒரு நாளைக்கு ௪-வேளையாகமுன்னரேயிருந்துதயாராகிவிடும். ஒரு வேளையில் இரண்டு மூன்று இடங்களில் சாப்பிடும் ஆசாமிகளும் இருக்கிறார்கள் சாப்பாட்டிற்கு நிகழ்ச்சிக் குறிப்பொன்று போட்டுவைத்துக்கொள்ள வேண்டுவதுதான். இல்லாதபோனால் மறந்தே போய்விடும். இவ் விருந்துகள் இல்லாவிட்டால் செவ்வாய் பிரயோஜனப்படாது கெட்டிக்காரர்கள் நம்மவர்கள். எல்லாவற்றிற்கும் சுவாமி பெயரைச் சொல்லி விடுகிறார்களல்லவா? சுவாமி பெயரைச் சொல்லிவிட்டால் தீர்ந்தது. சுவாமியைப் படுத்தும் அலங்கோலத்துக்குக் கணக்கு வழக்கில்லை. நாம் வைத்த சாமிதானே. எப்படிச் செய்தாலென்ன?

## யாரை ஜாதிப்பிரஷ்டம் செய்வது?

வேதசாஸ்திரம் அஷ்டாதசபுராணம், இதிகாசம், ஆகிய எல்லாம் குற்றம் செய்தவனுக்கே தண்டனையென்று பறையடிக்கின்றன. அரசியலும் உலகவழக்கமும் அப்படியே நடைபெற்று வருகின்றன. இது எல்லா மதஸ்தரும் ஒப்பமுடிந்த தொன்றாகும். அப்படியிருக்க, நம்மவருள் நிஷ்காரணமாய் விலங்கு பூண்டானையும், ஜாதிப்பிரஷ்டம் செய்வது என்ற வழக்கம் பரம்பரைக் கட்டுப்பாடு கலையாவண்ணமிருக்கும்நிமித்தம், அனுஷ்டானத்தில் வந்து கொண்டிருக்கிறது. அது அறிஞர் புகழத்தக்க தொன்றன்று. நாளிது சித்திரை மீ ௨௨ௗ வெளியான ஊழியனில், "நம்மவருள் விலங்கிடப்பட்டவர்கள்" என்ற தலையங்கத்தின்கீழ் கண்டிருக்கிற பத்திராதிபர் அபிப்பிராயம் முழுவதையும் நான் ஆமோதிக்கிறேன். தற்கால அரசியல் அமைச்சியில், போக்கின் நிலைமையோ காகிதத்தில் வரையப்படும் எழுத்தின் வன்மையையும் சாட்சியின் கட்டுரையையும், அடிப்படையாகக் கொண்டு மெய்யும் பொய்யாகி விடுகின்றது. அனுமானப்பிரமாணமும் தெய்வீக சக்தியும் வாய்ந்த பண்டைக்காலத்து அரசர்கள் தாங்கள் செல்லும் பொழுது தங்கள் கீர்த்தியை இங்குவைத்து ஏனையவற்றைக் கவர்ந்து சென்றார்கள் போலும் அந்தோ! பரிதாபம்! உதாரணமாக சுமார் ரு,௬,வ ஷங்களுக்கு முன் திரிசிபுரத்துக்கடுத்த ஒ தன்னூரில், கடைவைத்திருந்த நம்மவருள் ஒருவரை காரணமின்றி கைது செய்யப்பட்டு அன்னார் மது சமூகத்தை விட்டுத் தள்ளுண்டாரென நான் கேள்வியுற்றிருக்கிறேன் "கம்போஜா" முதலிய அன்னிய நாடுகளில் சிறு குற்றத்துக்குக்கூட யாப்பிடப்படுவதாய் நாம் கேள்வியுறுகின்றோம். அப்படியானல் அவர்களையெல்லாம் தள்ளிவிடுவதோ? தற்காலத்தும் உண்மைக்குப் பாடுபடுகின்ற பெரியார்களெல்லாம் சிறை சென்று திரும்புங்கால், அவர்களைப் பெரிதும் வாழ்த்தி பட்டினப் பிரவேசம் முதலியன செய்வதை நாம் நேரில் பார்க்கின்றோம். ஆதலால் நீதிநெறியில் நிற்கின்ற ஒருவர்க்கு, வாளாவரும் வல் விலங்கினிமித்தம் அன்னாரை ஜாதிப்பிரஷ்டம் செய்வதென்பது மிகக் கூடாமையேயாகும்.

வ. லெ. லெட்சுமணன்,
மணப்பாரை.

## காந்தி வர்த்தகசாலை.

இந்த வர்த்தகசாலையில், சுத்தக் கதர் நூலால் நெய்யப்பெற்ற வேஷ்டிகளும் சால்வைகளும் சேலைகளும் துண்டுகளும் சட்டைத் துணிகளும் படுக்கை விரிப்புகளும் விலை ஸரஸமாக விற்கப்பெறும். தேச நன்மையையும் கதர் அபிவிருத்தியையுங் கருதியே இந்த சாலை ஏற்பட்டிருப்பதால், அதிக லாபங் கருதாமலே விற்றுவருகிறோம். இன்னும் மற்ற சுதேசச் சாமான்களும் இங்குக்கிடைக்கும்.

காரியஸ்தர்,
காந்திவர்த்தகசாலை, சிராவயல்.
குன்றக்குடி போஸ்டு, (இராமநாதபுரம் ஜில்லா)

தந்தி அட்ரஸ்:—PAKCHAR தபால் பெட்டி நம்பர் ௫௫௭

## நவீன வைத்தியசாலை.

நம் ரெங்கூனிலும் அதைச்சேர்ந்த நாட்டுப்புறங்களிலுமுள்ள நம் தனவைசியரின் நன்மையின் பொருட்டு, அன்னவர்களில் சிலரால் மேற்சொல்லிய வைத்திய சாலை ஸ்தாபிக்கப்பட்டு, சென்ற ஒரு வருட காலமாக நிறைவேறி வருகிறது.

இதில் சென்னையில் சர்க்கார் அதிகாரப்பத்திரம்பெற்றும், பர்மா வைத்திய சட்டப்படி ரிஜிஸ்தர் செய்யப்பட்டும் சுமார் ௧௫-வருஷங்களாக பர்மா ஆஸ்பத்திரிகளில் அனுபோகஸ்தரும், நம் தேசத்தவர்களின் தேக தத்துவமறிந்தவருமான டாக்டரால், வியாதிகளுக்கும், நோயாளிகளுக்கும் தகுந்தவாறு அவிழ்தப் பிரயோகத்தாலும், வேண்டிய ஆப்ரேஷன், இன்ஜெக்ஷன் முதலியவைகளாலும் வியாதிகளை சொஸ்தம் செய்யப்படும்.

காட்டுப் புறங்களிலுள்ளவர்கள் நேராக வந்தபொழுது வைத்துப்பார்க்கத் தனிவீடும், அப்படி நேராக வரமுடியாதவர்களுக்கு விவரமாகக் கடிதமூலமாகத் தெரிவித்தால் தகுந்த மருந்தோ அல்லது அபிப்பிராயமோ கொடுத்தும் சௌகரியம் செய்யப்படும்.

இன்னும் வேண்டுமான மருந்துகளை ஷை வைத்தியசாலைக்கு எழுதி விலை சரசமாகத்தருவித்துக் கொள்ளலாம்.

மாடர்ன்பார்மஸி,
௭அ. டல் ஹௌஸி வீதி, ரங்கூன்.

## நோட்டீஸ்.

ராமநாதபுரம் ஜில்லா சிறுகூடல்பட்டியில் இருக்கும் வெங்கிடாசலம்செட்டியார் அவர்கள் குமாரர் வெ. சுப. சுப்பிரமணியன் செட்டியார் இதனல் சகலமானவர்களுக்கும்தெரிவிப்பதென்னவென்றால்:—

என்னுடைய ஸ்வீகார மகனான ராமன் என்ற வெங்கிடாசலம் என்பவன் துஷ்டர்கள் சாவகாசம் செய்துகொண்டும் காலித்தனமான நடவடிக்கைகளையும் நடத்திக்கொண்டும் இருக்கிறான். ஆகையால் எனக்கு வரவேண்டிய கடன் வகையறாவை யாவரும் ஷை யானிடம் கொடுக்கக் கூடாது மீறி ஷையானிடம் கொடுத்து ரசீதுபெற்றிருந்தால்அந்தரசீதுகள்நம்மைக் கட்டுப்படுத்த மாட்டாது மேற்படியானுக்கு நம்மள் சொத்துக்களை பந்தகப் பத்தவாவது கிரயம் செய்யவாவது பாத்தியமில்லை. மேற்படியானுக்கு வெண்ணலைகடனவது யாதொருசொத்தின் பேரிலாவது அல்லது ஜாமீனாவது ஒத்திமூலமாகவாவது தொகை கொடுக்கக் கூடாது. மீறிக் கொடுக்கும்பட்சத்தில் நம்மையாவது நம்முடைய சொத்துக்களையாவது கட்டுப்படுத்த மாட்டாதென்பதை யிதன் மூலமாய் அறிவிக்கலாயிற்று.

வெ. சுப சுப்பிரமணியன்செட்டியார்.

## அஷ்டபந்தன மருந்து

இரண்டு சேர் விலை ௧ ரூ ௫—0—0

கிடைக்கும் இடங்கள்.

புதுவயல் அள. மு. பாத்திரக்கடை.
காரைக்குடி, சி மெ புதூர்
ராம. உ. பூங்குடியார் வீடு.
ஸ்ரீமத் வைத்தியநாத சிவாச்சார்யர்
—— ஊமத்தநாடு.

தந்தி விலாசம் "செட்டியப்பா"

உங்கள் சோடாவாட்டர்
கலர் வகையறா ஆர்டர்களை

# சா. லெ. செ

மீனுக்ஷி எரேட்டட் வாட்டர்
கம்பெனிக்கு அனுப்புங்கள்.

செஞ்சை,
காரைக்குடி.



## கம்ப நாடர்.

இப்பெயர் புனைந்து, காரைக்குடியிலிருந்து ஒருமாதஸஞ்சிகை ஆடி முதல் வெளியாகும். இது டிம்மி ௧-௮க்கு எட்டு கொண்ட ௬௪ பக்கங்களுடையது. இதில் "வான்மீகரும் கம்பரும்" "கம்ப ராமாயண ஆராய்ச்சி" "கம்பராமாயணம் சுத்தச் செய்யுட் பதிப்பு" "கம்பராமாயணம் திருத்தமான வசனப் பதிப்பு" என்னும் பகுதிகள் வெளியாகும். ஒவ்வொரு பகுதியும் முடிவில் தனித்தனி புஸ்தகமாக்கிக் கொள்ளக்கூடியபடி மாதந்தோறும் தொடர்ந்த பக்கங்களையுடையது. இதன் வருஷ சந்தா ரூ. ௫—0—0. வேண்டுவோர் முன்னதாகவே தங்கள் விலாசத்தைக் கொடுத்துப் பதிவு செய்தல்வேண்டும். முதல்ஸஞ்சிகை வீ.பி.-யில் அனுப்பப்பெறும். முன் பணமாகவும் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

மோ. வே. கோவிந்தராஜையங்கார்,
கம்பராமாயணப் பிரசாரகர், காரைக்குடி.

## நோட்டீஸ்.

இதனடியில் கையொப்ப மிட்டிருக்கிறவனை காரைக்குடியி லிருக்கும் நா மு. லெ. சுப்பிரமணியஞ் செட்டியார் ருத்திரோத்காரிஞு சித்திரைமீ ௭ௗ யில் தன் வீட்டிற்குள் வைத்துக்கொண்டு நிரப்பந்தப்படித்தியும் பயமுறுத்தியும் யாதொரு பிரதிப் பிரயோசன மில்லாமல் ரிங்கி ௧௦௦௦0-க்கு ஒரு பிறநோட்டு உண்டியலும் அன்று தேதியிலே மோசமான வக்கணைக ளடங்கிய ஒரு வர்த்தமான லெட்டரையும் யெழுதிக் கொடுக்கும்படி செய்து வாங்கிக்கொண்டிருக்கிற விஷயமாய் ஷை சுப்பிரமணியஞ் செட்டியாருக்கு மறுதினமே என் வக்கீல் மூலமாய் ரிஜிஸ்டர் நோட்டீசும் நான் தந்தியும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

ஷை உண்டியலை வேறு ஒருவரும் பணங் கொடுத்து இண்டார்சு மெண்டு வாங்க கூடாதென்றும் அப்படி வாங்கினல், அதற்கு அடியில் கையொப்பமிட்டிருப்பவராகிய நான் யெவ்விதத்திலும் கட்டுப்பட வேண்டியதில்லை என்றும் இதன் மூலம் சகலருக்கும் தெரிவிக்கலாயிற்று.

இப்படிக்கி
பள. சுப. பழனியப்ப செட்டியார்.
தேவகோட்டை.

## விளம்பரம்

உண்மை உத்ஸாகம்உறுதிகளை உள்ளது உள்ளபடி ஆசிரியனைப்போல்எடுத்துப்போதிப்பது எது? பத்மநாதன்- சுவீகாரபுத்திரன்- அர்ச்சுன சந்நியாஸி- லக்ஷ்மிவிஜயம் எனும் நான்கு அரிய பெரிய சமூகச்சீர் திருத்தநூல்களே.

| | |
|---|---|
| பத்மநாதன் | ரூ. ௧—௪—0 |
| சுவீகாரபுத்திரன் | ரூ. 0—௧௨—0 |
| அர்ச்சுன சந்நியாஸி | ரூ. 0—௧௨—0 |
| லக்ஷ்மிவிஜயம் | ரூ. 0—௧0—0 |

கிடைக்குமிடம்— சு. பழனியப்பா.
ஸேப்டி மேட்சஸ் மேனேஜர்,
உளவாக்கோட், S. Malabar.

## அறிக்கை.

இராமநாதபுரம் ஜில்லா திருப்பத்தூர் தாலூகா சிராவயலிலிருக்கும் நா. மு. முத்தையா செட்டியார் மகன் நாகப்ப செட்டியாரென்ற சோமசுந்தரஞ் செட்டியார் இதனல் சகலருக்கும் தெரிப்பது என்னவென்றால்:—

எனது தந்தையாகிய ஷை முத்தய்யா செட்டியார் தமது பூர்வார்ஜித ஜங்கம ஸ்தாவர சொத்துக்களில் பலவற்றை அவர் சொந்தத்தில் பட்ட கடன்களுக்காக பல வருஷங்கட்கு முன்னரே விற்றும் பராதீனம் செய்தும்இருக்கின்றார். கடைசியாய் திருப்புத்தூர் சப்டிவிஷன் சிராவயல் கிராமத்தில் பிதுரார்ஜித ஜேஜியா நிலங்களையும் ௧௯௨௨ஞு ஆகஸ்டுமீ ௧௦ௗ எழுவங்கோட்டை தாலூகா சொக்கநேந்தலிருக்கும் அழ. இராமநாதன் செட்டியார் என்பவருக்கு விக்ரயமும் செய்துவிட்டார். எனவே, ஷை முத்தய்யா செட்டியாருக்கு பிதுரார்ஜித ஆஸ்தி கிடையாது. ஆயினும், அவர் இன்னும் கடன் வாங்க முயற்சி செய்வதாகத் தெரிய வருகிறது. யாராவது அவருக்குக் கடன் கொடுத்திருந்தாலும் இனிக் கொடுத்தாலும் அது என்னைக்கட்டுப்படுத்தாது என்பதையும், அதற்கு அவர்களே ஜவாப்தாரி என்பதையும் இதன் மூலமாய் அறிவிக்கிறேன்.

மு. சோமசுந்தரம் செட்டியார்

## அறிவிப்பு.

இராமநாதபுரம் ஜில்லா திருப்பத்தூர் தாலூகா கீழச்சிவற்பட்டியிலிருக்கும் நா. பழ. பெரி. பெரியகருப்பன் செட்டியார் இதன் மூலம் சகலருக்கும் தெரிவிப்பது என்னவென்றால்:—

என் மகன் ௧௮ வயதுள்ள பழநியப்ப னென்ற சோமசுந்தரம் சில காலமாக துர் நடத்தையில் தலையிட்டு அதன் செலவுக்காக பிறரிடத்தில் யாதொரு பிரதிப் பிரயோஜனமும் பெறாமலும், சொற்பத் தொகைகளுக்காக பெருந்தொகைகளுக்கு தஸ்தவேஜிகள் வகையறா எழுதிக்கொடுத்து வருவதாகவும் தெரிகிறது. அவன் ௨ வருஷ காலமாக குடும்பத்தில் ஒத்து வாழாமலும் வீட்டுக்கு வாராமல் தாசி வீடுகளிலும் அந்தூர் நடத்தைக்கு ஒத்தாசையாயிருப்பவர் வீடுகளிலும் தங்கியும் அலைந்து கொண்டிருக்கிறான். எனக்கு யாதொரு பிதுரார்ஜித சொத்துக்களுமில்லை. எல்லாம் என்னால் சுயார்ஜிதத்தில் சம்பாதிக்கப் பட்டவைகள் ஆகையால் அவைகளில் அவனுக்குஒன்றும் பாத்தியமில்லை. ஆகையால் அவனுக்குக் கடன் கொடுத்திருப்பவர்களாவது இனி கடன் கொடுப்பவர்களாவது எனது சொத்துக்களில் பிரவேசிக்கக்கூடியதில்லை. எவரும் பணத்தைக்கொடுத்து இழந்து விடவேண்டாம்.

நா. பழ. பெரி.
பெரியகருப்பன் செட்டியார்.

கெட்டிச்சாயம்! நயமான உடை!!

## கொரநாட்டுக் கண்டாங்கி.

பிரசித்திபெற்ற ஷையூர் கண்டாங்கிகள் எங்கள்சொந்தத்தறியில்அழுத்தமான நெசவுடனும்கெட்டிச்சாயத்துடனும்தயாரானவை சரிகையில் பலரகம். கரைவேலையுள்ளதும், உடல்வேலையுள்ளதும், அருகில் பட்டாலும் சரிகையாலும் பேட் உள்ளதும், பெங்களூர்மாதிரி சுத்தப்பட்டு ரகங்கள், கால்இறங்கியது ௧௦௦-அடிக்கு, கால் இறங்கிய ௪௦௦, ௮௦ சாதாரணகளும் ௧௦ முழம் முதல் ௧௨ முழம்வரையிலும், ஷை நூல்களில்சித்தாடைகள் ௬-முழம் முதல் ௯-முழம் வரையிலும் நாங்கள் நிதானமான விலைக்கு அனுப்பித்தருவோம். பெரிய ஆர்டர்களுக்கு எங்கட்குத் தகவல் கொடுத்தால் எங்கள் காரியஸ்தரை யனுப்புவோம்.

ஓ. க. இராமசாமி செட்டியார்,
ஜவுளி வியாபாரம்,
கொரநாடு. (மாயவரம்)

பிராஞ்சு ஆபீஸ்,
கீழச்சிவல்பட்டி.

## பெங்களூர்.

விலாசரஸம். உத்திரவாதம்.

நல்ல சாயம்.

அசல்பட்டுப்புடவைகள், சித்தாடைகள்பாவாடைகள். ௭-முழம்முதல் ௯-முழம் உள்ளது. இதற்கு நிகரானது ஆர்டரின்பேரில்சப்ளை செய்வோம். ஷை நூல்களின் தர்வேலைசெய்கிறவர்கள், எங்கள்சொந்தத்தறியாகச்சே விலாசாசம். சாயம்கியாரண்டி. மாதிரிபார்த்து ஆர்டர்களை அட்வான்ஸுடன் எதிர்பார்க்கிறோம். வெளியூர்ச்சில்லரை ஆர்டர்களை வி.பி. செய்வதுடன், பெரியஆர்டர்கள் செய்தவுடனே எங்கள்ஏஜண்டை அனுப்புவோம். மற்றையவர்கள்தங்களைப் பெங்களூர் உருப்படி என்று கொடுப்பதை வாங்கிஏமாறுகிறீர்கள். விலை உயர்ந்தவை ஆர்டரின் பேரில்தயார் செய்யப்படும்.

குறிப்பு:-கலியாணம் முதலிய விசேஷங்களுக்குவேண்டியவைகள் சப்ளைசெய்யப்படும்.

தந்தி அட்ரஸ்:—கண்டாங்கி, பெங்களூர் ஸிட்டி.

(Tel:- "Kandangi" Bangalore City) தங்கள் உண்மையுள்ள,

(C. K.) சி. கெ. உச்சப்பா செட்டியார்

சம்பக வசதிவீதி, சிக்பேட்டை பெங்களூர் ஸிட்டி

---

## சந்தா விபரம்.

இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு வருஷம் ஒன்றுக்கு ... ரு—0—0
சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்குவருஷம்ஒன்றுக்கு ௬—0—0
தனிப்பிரதி ஒன்றுக்கு ... 0—௨—0

## விளம்பர விவரம்.

மாதம் ௧-க்குப்பத்தி ௧-க்கு... ௨0—0—0
ஷை அரைப்பத்திக்கு... ௧௧—0—0

காரியஸ்தர்,
தனவைசிய ஊழியன் ஆபீஸ்,
காரைக்குடி.



ராய. சொக்கலிங்கத்தால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில்
அச்சியர் றிப்பிரசுரம் செய்யப்பெற்றது.

